ஸ்ரீ:

# ஸ்ரீமத் பகவத் கீதை—
# இரண்டாவது அத்தியாயம்.

## தமிழ்—வசனம்

எழுதியவர். P. B. K. ஸ்ரீநிவாஸாசாரியார்.
நியாய, வியாகரண சிரோமணி.
உபாத்தியாயர். ஸ்ரீபாஷ்யகாரஸித்தாந்த வர்த்தினி
அட்வான்ஸ்ட்ஸம்ஸ்கிருத ஸ்கூல்
நெ 51. நாராயண முதலித்தெரு. G. T. மதருஸ்.

திருநாங்கூர். ஸ்ரீ உ. வே. N. V. நாராயண அய்யங்கார்.
அவர்களின் ஆதரவினால் அச்சிடப்பட்டது.

கிடைக்குமிடம். P. B. K. ஸ்ரீநிவாஸாசாரியார்.
51. நாராயண முதலித் தெரு, G. T. மதருஸ்.

 26—1—1950. [விலை அணா 6.

இந்தியக் குடியரசு முதல் நாள்.

ஸ்ரீ:

# ஸ்ரீமத் பகவத் கீதை—

# இரண்டாவது அத்தியாயம்.

## தமிழ்—வசனம்.

எழுதியவர். P. B. K. ஸ்ரீநிவாஸாசாரியார்.
நியாய, வியாகரண சிரோமணி.
உபாத்தியாயர். ஸ்ரீபாஷ்யகாரஸித்தாந்த வர்த்தினீ
அட்வான்ஸ்ட்ஸம்ஸ்கிருத ஸ்கூல்
நெ 51. நாராயண முதலித்தெரு. G. T. மதருஸ்

திருவிங்கூர். ஸ்ரீ. உ. வே. N. V. நாராயண அய்யங்கார்
அவர்களின் ஆதரவினுல் அச்சிடப்பட்டது.

கிடைக்குமிடம். P. B. K. ஸ்ரீநிவாஸாசாரியார்
51. நாராயண முதலித் தெரு, G. T. மதருஸ்

 26—1—1950. [விலை அணு 6.

இந்தியக் குடியரசு முதல் நாள்.

# பொருளடக்கம்.

# முன்னுரை.

ஸ்ரீய:பதியானஸர்வேசுவரன், லீலையாகவேஸ்ருஷ்டிகாலத்தில் இவ்வுலகை உண்டாக்கியும், ஸ்திதிகாலத்தில் ரக்ஷித்தும், பிரளயகாலத்தில் அழித்தும், லீலாரஸமனுபவிக்கிறான். பகவானுடைய இம்முத்தொழிலும் அவனுடையஸத்தியஸங்கல்பமூலமே நடைபெறுகிறது. இந்தஸத்தியஸங்கல்பமே' ஸ்ரீஸுதர்சனம் என்றும், பகவதாக்ஞா சக்கிரம்' என்றும் அழைக்கப்படுகிறது. ஆகவே நமது முன்னோர்கள் அரசாட்சிக்கு சக்கிரம் என்றபெயரை ஏற்படுத்தினார்கள். இக்காரணங்கொண்டு நோக்கில நமதுஇந்தியக் குடியரசின் அடையாளமாக அசோகசக்கிரவர்த்தியின் தர்மசக்கிரமமைந்ததுசாலப்பொருத்தமே. நிற்க, ஸ்ரீஸுதர்சனமானது துஷ்டர்களைநிக்ரஹிக்க வேண்டியும், ஸாதுக்களை ரக்ஷிக்கவேண்டியும், கீதைகத்திவில் முதலான பலசஸ்த்ரங்களாயும், வேதம் ஸ்ம்ருதி புராணம் முதலான பலசாஸ்த்ரங்களாயும், உலகெங்கும் பரவியிருக்கிறது.

அதில் ஸகலசாஸ்த்ரஸாரமானது ஸ்ரீகிருஷ்ணபகவான் அருளிச்செய்த கீதையாகும். இது 18 அத்தியாயங்கள் கொண்டதாய் 700 சுலோகங்களையுடையதாய் விளங்குகிறது. இது வேதவியாஸராலருளிச்செய்யப்பட்டதாயும் ஐந்தாவது வேதமென்ற பிரஸித்தமானதும், 18 பர்வங்களையுடையதுமான ஸ்ரீமன் மஹாபாரதத்தில் 6—வது பருவமான பீஷ்மபருவத்தில் 23-வது அத்தியாயந்துடங்கி 40வது அத்தியாயம் முடியவிருக்கிறது. வேதங்களுக்கு அதனந்தமாய் ரஹஸ்யபாகமான உபநிஷத்துக்கள் போல பாரதத்திற்கு பகவத் கீதையுபநிஷத்தாகவிருக்கிறது. மஹாபாரதயுத்த மாரம் பதினமான அமாவாஸ்யையிலிருந்து 10 வது தினம் யுத்தத்தில் பீஷ்மர் வீழ்ந்து சரதல் பத்தில் படுத்துக் கொண்ட விஷயத்தை மறு நாள் கார்திகசுக்ல ஏகாதசிதினம்ஸஞ்சயன் திருதராஷ்ட்ரனுக்கு முதலில் சுருக்கமாகச் சொல்லுகிறான். பிறகுவிரிவாகச் சொல்லும் பொழுதுயுத்தத்தின் முதல்நாளில் ஸ்ரீகிருஷ்ணபகவான்

அர்ஜுனனுக்கு இந்த கீதை உபதேசித்த விதத்தைச் சொன்னான். இந்தகீதையின் முதல் சுலோகம் த்ருதராஷ்ட்ரன் ஸஞ்சயனை வினவுவதாயிருக்கிறது. “தர்மக்ஷேத்ரே குருக்ஷேத்ரே ஸமவேதாயுயுத்ஸவ:! மாமகா: பாண்டவாச்சைவகிம குர்வதஸஞ்சய!!” என்று. இதன் பொருள். தர்மக்ஷேத்திரமாகையால் குருக்ஷேத்திரத்திலடிவைத்த மாத்திரம் இருதரப்பிலும் யுத்தத்தில் வெறுப்புண்டாகி ஸமாதானம் ஏற்படலாம், என்றபிப்ராயமாக குருக்ஷேத்திரத்தில் போருக்காகக் கூடியிருக்கும் என்பிள்ளைகளான துர்யோதனுதியரும், பாண்டு புத்திரர்களான தர்மபுத்திராதியரும என்ன செய்தார்கள் ஓஸஞ்சயனே! நீ எனக்கிதைச் சொல்' என்று. ஸஞ்சயன் இதற்குநேரான பதிலைகீதையின் முடிவு சுலோகத்தில் த்ருதராஷ்ட்ரனைப் பார்த்து உன் பிள்ளைகள் யுத்தத்திற்காக துடிக்க, யுத்தம் எப்படி நிற்கும், என்பதை யறிவிக்கவேண்டியும், ஜயம் (அதாவது வெற்றி) எப்பக்கமுண்டா மென்பதில் தன்னபிப்ராயத்தைத் தெரிவிக்க வேண்டியும், “யத்ரயோக கேசுவர: கிருஷ்ண: யத்ரபார்த் தோதநுர்த்தர:! தத்ரஸ்ரீர்விஜயோ பூதிர்த்ருவா நீதிர்மதிர்மம!!” என்று சொல்லுகிறான். (கீதை 18 வது அத்தியாயம் 78 வது சுலோகம்.). இதன் பொருள். கர்மம், ஞானம், முதலிய யோகங்களுக்கு ஆராத்யனும் விஷயமுமான ஸ்ரீகிருஷ்ணன், கையில் காண்டீவத்தை ஏந்தி நிர்க்கும் அர்ஜுனன், இவ்விருவரும் நரநாராயணும் சர்கள். இவர்கள் எப்பக்கம் இருக்கின்றனரோ, அங்குதான் வீர்யலக்ஷ்மியும், ஜயலெக்ஷ்மியும், ராஜ்ஜிய லக்ஷ்மியும், நிலையான நீதியுமுண்டாகும். இது என்னுடைய திடமான 'நம்பிக்கை' என்று.

இவ்விதமான இந்த கீதையில் இரண்டாவது அத்தியாயம் இதிலுள்ள எல்லா விஷயங்களுக்கும் சுருக்கமாயிருக்கிறது. கீதார்த்த விவரணமான நம் மாழ்வார் அருளிச்செய்த திருவாய் மொழி ஆயிரத்திர்க்கு முதற் திருவாய் மொழி ஸங்கிரஹமானது போன்று கீதார்த்த ஸங்கிரஹம் கீதையின் இரண்டாவது அத்தியாயம்.

# 1. கீதையின் பொது விஷயம்

(1) பகவதாராதன ரூபமான கர்மம் (2) இவ்வித கர்மஞ் செய்யுமாத் மாவைப் பற்றின ஞானம் (3) பரமாத் மாவைத் தவிர வேறு விஷயத்தில் வைராக்கியம் (4) பரம னிடம் அநுராகமாகிற பக்தி (5) பகவானையே உபாயமாக வும், உபேயமாகவும் (அதாவது அடையும் பயனாகவும்) பற்றுகிற தான பிரபத்தி (6) இப்படி பிரபந்நர்களான பாகவ தோத்தமர்களுடைய வபிமானத்திலடங்கி நிற்றல், இவை 6 உபாயங்களால் அடையக்கூடிய பரப்பிரம் ஹமான ஸ்ரீமந்நாராயணனே கீதை முழுவதர்க்கும் விஷயமாகிறான். வேதம் முதலிய சாஸ்த்ரமுழுமைக்கும் பகவானே விஷய மென்பது "வேதைச் சஸர்வைரஹமேவவேத்ய:" என் கிற கீதாவாக்கியத்தால் தேறின விஷயம். ஆகையால் ஸகல சாஸ்த்ர ஸாரமான கீதைக்கும் பகவானே விஷய மாகிறான். இதுவே கீதாஸாரம்.

---

# 2. கீதை 2-வது அத்தியாயத்தின் பொது விஷயம்.

யுத்தத்திற்கு வேண்டிய ஏற்பாடு செய்தபிறகு, இரு சேனைகளின் நடுவில் நின்று இருதரப்பிலுமுள்ள ஸ்நேஹிதர்கள், பந்துக்கள் இவர்களைப் பார்த்ததும், திடீரென்று கருணையுண்டாகத்தகாதவவ்விடத்தில் அவர்களிடம் அன்பு மிகுதியால் கருணையுண்டாகி, சோகமோஹத்தால் தனக்கு தர்மமான யுத்தத்தில் அதர்ம புத்தியும், தனக்கு அதர்மமாய் பரதர்மமான பிச்சை யெடுப்பதில் தர்ம புத்தியும், உண்டாகிக் கலங்கின அர்ஜுனனுக்கு, அவனுடைய அஜ்ஞானத்தைப் போக்கடிக்கவேண்டி ஸ்ரீகிருஷ்ண பகவான் இவ்வத்தியாயத்தில் "ஆத்மா நித்யம், கர்மங்களெல்லாம் அவற்றின் பலத்திலாசையில்லாது அவசியம் செய்யவேண்டியனவே" என்று உபதேசிக்கிறான். இதற்குபயோகமாக இன்னமும் பல விஷயங்களையும், நிலையான ஆத்மஞானத்தின் லக்ஷணம் அதன் பிரிவு இவைகளையுமுபதேசிக்கிறான். இவ்வத்யாயத்தின் இவ்விஷயங்களை 8 விஷயங்களாகப் பிரித்து, இவ்விஷயங்கள் இங்கு எழுதப்பட்டிருக்கின்றன.

---

# 3. கீதை 2 வது அத்தியாயத்தின் தமிழ் வசனம்.

## 1. அர்ஜுனனுடைய விண்ணப்பம்.

(1 முதல் 10 சுலோகம்)

வியாஸருடைய பரமாநுக்ரஹத்தால் ஸஞ்சயன், பாரத யுத்தத்தில் நடந்த எல்லா ஸமாசாரங்களையும் நேராகக் காண்பதுபோல் கண்டு திருதராஷ்ட்ரனுக்குச் சொல்லுகிறான். தனக்கு இது தர்மம், இது அதர்மம், என்றறியாது கலங்கின அர்ஜுனன், காண்டீபத்தைக் கீழே போகட்டு, யுத்தஞ் செய்யமாட்டேன், என்று சொல்லி தேரின் நடுவில் வெறுமனே உட்கார்ந்து விட்டான். அவனுடைய சோகம், தனக்கொப்புமிலையற்றது. அளவுபடக்கூறவியலாத சோகத்தை யவனுடைய கண்கள் நீர் நிரம்பிக் கலங்கி எடுத்துக் காட்டின, என்று (அப்படியானால் யுத்தம் நின்று விடுமா, என்பிள்ளைகள் பிழைப்பார்களா, என்றபிப்ராயமாகத்ருதராஷ்ட்ரன் ஸஞ்சயனைப் பார்க்க, அர்ஜுனன் தகாத விடத்தில் தகாதவர்களிடம் கருணை செய்தான். ஸ்ரீகிருஷ்ண பகவானோ ஸாதுக்களிடமும், பூமியிடமும் கருணை செய்து பூமிபாரத்தைக் கழிக்க வேண்டி கீதோபதேசவழியாக அர்ஜுனனை யுத்தத்தில் மூளஸங்கல்பித்தான், என்றபிப்ராயமாக ஸஞ்சயன் ஸ்ரீ கிருஷ்ணார்ஜுனஸம்வாத ரூபமான கீதையில் இவ்விடத்திய பகவானின் வாக்கியத்தைச் சொல்லுகிறான்.)

பகவான் சொல்லுகிறான். ஓ அர்ஜுனா! என் அத்தையான பிருதையின் மகனாய், யுத்தத்தில் இருகைகளாலுமம்பெய்தி சத்ருவை வாட்டுமவனாய், சுத்த வீரனான நீ

நிறுத்துவது தகாது. உன்னை நம்பி உன்னை ரதியாய் (அதாவது யஜமானனாய்) வைத்து நான் ஸாரதியாய் வந்தது ரொம்ப அழகுதான். மனதின் அதைரியமாகிற இந்த பேடித் தனத்தை விட்டுவிடு. போருக்கு முனைவாயாக. பொய்யான பொருளையே யறியுமவர்கட்கே இந்த அதைரியந் தகுந்தது. இது இஹபரலோக சுகத்தைக் கெடுக்கும். கெட்டபெயரையுந் தரும். மற்றவர்கட்கு இந்தபயம் வந்தால் வரலாம். உனக்கிது தகாதென்று பகவானின் வார்த்தை. இதைக்கேட்டுச் சிறிது தெளிவடைந்த அர்ஜுனன், மற்றவர்களையாவது கொல்லலாம். பீஷ்மர், துரோணர், முதலிய பெரியோர்களைக் கொல்லுவது சரியல்லவே. மேலுமவர்கள் நமக்கெதிர்கக்ஷியிலிருப்பதாலேயே நான் யுத்தஞ் செய்யப் பின்வாங்குகிறேன் என்று சொன்னான். மேலுமவன் சொல்லுகிறான். புஷ்பத்தாலர்ச்சிக்கத் தகுந்த பீஷ்மாதியரை பூஜிக்காததே பாபமாயிருக்க அவர்களை பாணங்களாலடிப்பது எங்ஙனே பொருந்தும்? ஓ கிருஷ்ணா! நீயும் உன் விரோதியான மது முதலியோரை யழித்தாயே தவிர உன் குருவான சாந்தீபனி முனிவரை யழித்தாயா? அல்லது இனித்தான் அழிப்பாயா? ஜீவனத்திற்காக க்ஷத்திரியனான எனக்கு யுத்தம் ஸ்வதர்மம். பிச்சையெடுப்பது பாபம் பரதர்மம், என்பது தெரியுமாயினும் யுத்தத்தில் குருஹிம்ஸையாகிற பாபமல்லவோ ஏற்படும். ஆகவேநான் பிச்சையெடுத்துப் பிழைக்கவே விரும்புகிறேன். இன்னமும், இந்தப் பெரியோர்கள் அர்த்தகாமபரர்களாய் போர் புரிய விரும்புகிறார்கள். சிஷ்யனுக்கு குருவின் திருமேனியைப் பேணுவதே கடமை, என்பதை நான் பெரியோர்களிடம் கேட்டிருக்கிறேன். இப்படியிருக்க அவர்களைக் கொன்று

அவர்களுடைய ரத்தம் தோய்ந்த ராஜ்ஜிய சுகத்தை யநுப விப்பதால் அருவருப்பாயிருக்குமே தவிர சுகம் சிறிது மிருக்காது. நமக்கு விஷம், நெருப்பு முதலிய திட்ட துர்யோதனாதியரைக் கொல்லுவது நியாயமானாலும் பீஷ்மர் முதலான எதிர்சேனை முழுவதையும் அழிக்க நான் விரும்ப வில்லை. எல்லாரும் போய்நாம் ஐந்தாறுபேரே மீளுவதால் என்ன சுகமுண்டு. ராஜ்ஜியம் முதலிய சுக போகங்கள் எல்லோருடனுங் கூடியனுபவிக்கவே யல்லவா இருக்கிறது. தவிரவும் யுத்தத்தில் வெற்றியோ? தோல்வியோ? யார், 'வெற்றியே' என்று நிச்சயமாய்க் கண்டது. சேரில் காலைவிட்டு அலம்புவதிலும் முதலிலேயே சேறை மிதிக்காமலிருப்பது நல்லதல்லவா! ஓ கிருஷ்ணா! எனக்கென்னவோ புத்தி தடுமாறுகிறது. நீயே இவ்வளவுக்குங் காரணம். ஹ்ருஷீகேசன் (அதாவது இந்திரியங்களை நியமிப்பவன்) என்று பெயர் பெற்று என்னுடைய புலன்களை ஆட்டிவைக்கிறாய். எனக்கு வேதாந்த ஞானமில்லை. அதைப்பெற வேறொரு உபாயமும் என்னிடமில்லை. ஞானமின்மையாலேயே பெரியோர்களிடம் பழகித் தெளிந்த என் ஸ்வபாவமும் மூடப்பட்டிருக்கிறது. பெரிதான தர்மா தர்மஸந்தேஹமுண்டாய்விட்டது. எனக்கு எது நல்லதோ, அதை நீயே தீர்மானித்து எனக்குச்சொல். நான் உனக்குச் சிஷ்யன். உன் திருவடிகளில் நன்றாக சரணாகதி செய்துவிட்டேன் நீ எப்படி என்னை விதிக்கிறாயோ, அப்படியே நான் செய்கிறேன். என் உடம்பு முழுவதையும் கொளுத்தி இந்திரியங்களை உலர்த்திடுமென் சோகத்தைப் போக்கடிக்குமுபாயம் இவ்வுலகில் ஏக சக்கிராதிபத்யமுமல்ல ஸ்வர்கலோகாதிபத்தியமுமல்ல. இப்பொழுது சோகத்தைப்போக்கடிக்கக் கூடியது வேதாந்த ஞானமே' என்று

தோன்றுகிறது; அதுவானால் அதையோ, வேறொன்றாகில் அதையுமோ நீ இப்பொழுது உபதேசஞ் செய்யவேணும், என்று அர்ஜுனன் ஸ்ரீக்ருஷ்ணனின் திருவடித்தாமரைகளில் ஸாஷ்டாங்க பிரணாமஞ் செய்து விண்ணப்பித்தான். பிறகு அர்ஜுனனைப்பார்த்து புன்முறுவல் செய்து கொண்டு அர்ஜுனனுக்கு கீதோபதேசங் கேழ்க்க யோக்யதையைத்தான் உண்டாக்கினமையும், அதுண்டானமையும் அறிந்து பகவான், அர்ஜுனனை வியாஜமாக்கி உலகத்துக்குக் கீதாம்ருதம் தந்துபோகத் திருவுள்ளம் பற்றி பரிஹாஸ வார்த்தை பேசுவதுபோலவே, சொல்லுகிற தனக்கும், கேழ்க்கிறவர்ஜுனனுக்கும் சிறிதும் ஆயாஸம் தட்டாதபடி கீதோபதேசஞ் செய்தான், என்று மிகுந்த ஆச்சரிய குணமுடையவனாய் ஸஞ்சயன் த்ருதராஷ்ட்ரனிடம் சொன்னான்.

---

## 2. ஆத்மாநித்தியம் தேஹம் அநித்தியம்

### (11 முதல் 30 சுலோகம்)

அர்ஜுனனுடைய இவ்விதமான மோஹத்திற்குக் காரணம் ஆத்ம ஞானமில்லாமையே, என்னுந் திருவுள்ளங் கொண்டு பகவான் பரமகிருபையுடன் மூன்று முதலில் ஆத்மா நித்தியம், தேஹமநித்யம், இவ்வித தேஹாத்ம ஞான முண்டாவது அவரவர்கள் தங்கள் கர்மங்களை பலத்திலாசையில்லாது செய்வதாலேயே, என்பதை உபதேசிக்கிறான்.

ஓ அர்ஜுனா! நீவருந்தத்தகாத விஷயத்தைப்பற்றி வருந்துகிறாய். இத்தால் உன்னைஞானசூனியன்(அக்ஞானி) என்று நினைக்கவேண்டியிருக்கிறது. யுத்தத்தில் புருஷர்கள் நாசமடைவதால் ஸ்த்ரீகள் கெட்டுஅத்தால் ஜாதிஸாங்கரிய மேற்பட்டுபித்ருக்கள் பிண்டம் தர்பணம் இவைகளை இழப்பார்கள், என்று சொல்லுகிறாய். இத்தால் தேஹம் தவிர ஆத்மா ஒன்றிருக்கிறது, என்றறிந்தஞானியாகவும் உன்னை நினைக்கவேண்டியிருக்கிறது. ஜீவஹிம்ஸை செய்யக்கூடாது என்று சாஸ்திரம் சொல்லுவதாலும், யுத்தத்திலஜீவஹிம்ஸையிருப்பதாலும், யுத்தமே தகாதபோது பீஷ்மாதியரை ஹிம்ஸிப்பது முடியாது, என்றுசொல்லுவதால் தர்மமின்னதென்றறியாதவனாகவும் உன்னைநினைக்கவேண்டியிருக்கிறது. உண்மைஞானம் பெற்றவர்கள் தேஹத்தைப்பற்றியும் ஆத்மாவைப்பற்றியும் கவலைப் படமாட்டார்கள். அஸிதர் தேவலர்,முதலிய பெரியோர்களிடமிருந்து என்னைப்பரமா

த்மா, என்றுநீதெரிந்து கொண்டிருக்கிறாய். நான்நித்தியன் என்பதில் உனக்கு எப்படிஸந்தேஹமில்லையோ; அப்படியே நீயும் மற்றுமிங்குள்ள அரசர் முதலானஜீவர்களும் நித்தியர்களே, என்றறிவாயாக. நாமெல்லாரும், வருங்காலம் நிகழ்காலம் கழிகாலமென்னும் முக்காலத்திலுமிருப்பவர்களே. (நித்தியமெனுமிவ்வொன்றிலுமே நீங்களும் நானும் ஒன்று நான்ஸ்வதந்திரன். நீங்கள்எனக்குப் பாதந்த்ரர்கள்.) இவ்விதஞானமுடையவொருவன் தைரியமாய் ஒருதேஹம் போய் இன்னொருசரீரம் வருவதை எதிர்பார்ப்பானே தவிரமோஹிக்கமாட்டான். இந்தசரீரத்தில் பால்யம், யௌவனம், கிழத்தனம் எப்படி மாறிமாறிவருகிறதோ அப்படியே ஒரு சரீரப்போய் இன்னொருசரீரம் வருகிறது. ஜீவர்களுக்குப்புதியவநுபவத்தில் ஆசையேதவிர வெருப்புண்டாகாது. ஏனெனில்? மனிதனின்மனதானது புதிதுபுதிதான மாறுதலை விரும்புவது கண்கூடு. இவ்வுலகிலுண்டாகும், சப்தம், ஸ்பர்சம், (அதாவது குளிர்ச்சி, வெப்பம்) ரூபம், ரஸம் கந்தம் முதலிய விஷயங்கள் காது, உடல், கண், நாக்கு, மூக்கு முதலிய இந்த்திரியங்களுடன் ஸம்பந்தித்து நல்லவையானல் சுகத்தையும், கெட்டவையானல் துக்கத்தையும் தருகின்றன. இவ்விஷய ஸம்பந்தமோ வருவதும் போவதுமாயிருக்கும். நாம் விரும்பும்போது வராது. விரும்பாதபொழுது போகாது. கர்மமடியாக அவ்வக்காலங்களில் வந்துபோகும். கர்மமானது அடியோடு கழிந்துவிட்டால் விஷய ஸம்பந்தமானது எவ்வளவு வருந்திக் கூப்பிட்டாலும் வராது. ஏனெனில், அது அநித்யம். ஆகையால் போரில் பாணுதிகளாலேற்படும்ஹிம்ஸைகளைப் பொறுத்துக்கொள்ளவேணும். பரதவம்சத்தில் பிறந்த உனக்கு அதிகம் சொல்லுவானேன்! நீ பெரியகாரியங்களையே செய்து

பெரும்புகழையே பெற வேண்டும். உண்டாகும் சுகதுக்கங்களைக்கர்மமடியாக வருவன வென்று நிச்சயபுத்தியுள்ளவனை வாழ்க்கையின் நடுவில் உண்டாகும் கஷ்டங்கள் கலக்காது. அவசியம் வந்தாகவேண்டியதுக்கத்தையும் சுகமாகவே நினைத்திருப்பவன், மாறுதலடையாத பரிசுத்த ஜீவஸ்வரூபமான அமிருத மெனும் மோக்ஷத்தைப் பெற யோக்கியனாகிறான் அடிக்கடி மாறுதலடைந்து பழயஉருவம் போய் புதிய உருவம் உண்டாவதால் அவைகளுக்குப் பெயர்களும் மாறி மாறிவருவதால் சரீரம்முதலிய அசேதனங்களை 'அஸத்' என்று பெரியோர்கள் சொல்லுகின்றனர் ஒரே விதமாகச் சொல்லக் கூடாதவை அஸத்தாகின்றன. எப்பொழுதும் ஒரேவிதமாய் ஒவ்வொரு தேஹத்திலுமுள்ளவர்களான ஆத்மாக்களை 'ஸத்' என்று சொல்லுகிறார்கள். ஒரேவிதமாக எப்பொழுது மிருப்பவை ஸத்தென்று உண்மை யறிந்தவர்களால் நிச்சயிக்கப் பட்டிருக்கிறது. ஆகவே தேஹங்களுக்கு ஸத்பாவமும் (அதாவது ஸத்தின் தன்மையும்) ஆத்மாக்களுக்கு அஸத்பாவமும் கிடையாது. (ஆத்மாக்கள் எப்படி நித்தியர்களோ, அவ்விதமே, ஸ்தூலமாய் கார்யமானவ்யக்த தேஹாதிவிகாரங்கள் அநித்யமானாலும் ஸூக்ஷ்மமாய் காரணமான அவ்யக்தபிரக்ருதி யெனும் அஸத்தும் நித்தியமே யாகையால் இவை ஏதாவதொரு அவஸ்தையில் இருப்பனவே என்னவுமாம். மத்வமதம்)

மேலும் அணுவான ஆத்மஸ்வரூபம் எவ்வித ஸூக்ஷ்மவஸ்து விலும் பிரவேசிக்கத்தகுதியுள்ளது. தன் ஞான சக்த்யாதி குணங்களாலும் எங்கும் நிறைந்திருக்கக் கூடியது. இத்தால் ஆத்மாவை யழிக்க வேறொரு பதார்த்தமுமில்லை, என்பது தெரியும். மண்குடமானது கல்லிலோ

அல்லது மண்குடத்தின்மேல் கல்லோ விழுந்தால் அந்த மண்குடம் உடைந்து விடுகிறது. அழிக்கும் பொருள் அழிகிற பொருளை யடைந்து அழிக்கிறதென்பது நாம் பார்க்கும் விஷயம். ஆத்மா ஓரிடத்திலிருக்கக் கூடிய உருவமான பொருளில்லை. அருவானது. இக்காரணத்தால் உருவமான பொருளையறியும் புலன்களால் அறிய முடியாதவன் 'ஆத்மா. என் தேஹம் என் வீடு' என்று எல்லாவற்றையுமறிபவன் ஜீவன். ஆகவே உருவமாய், புலன்களுக்கு விஷயமான அநித்ய சரீராதிகளிலுங் காட்டில், அருவாய் புலன்களாலறிய முடியாதவனுயெங்குமுள்ளவனுன நித்திய ஜீவன் வேறுகிறுன். இன்னமும் ஆத்மாவைக் கொன்றவனுக நினைப்பவனும் கொல்லப்பட்டவனுக நினைப்பவனும், மூடனே. ஜீவனுக்குப் பிறப்பில்லை என்று சாஸ்த்திரம் பிறப்பில்லாதபோது மரணமேது. வளர்ச்சி, தளர்ச்சி, மாறுதல், எனும் மீதிவிகாரந்தானேது. ஜீவன் நித்தியனுகையால் எப்பொழுதும் புதியவனுயே அனுபவிக்கப் படுகிறுன். யாவனொருவன் இவ்வித ஆத்ம தத்வத்தை யறிவானே அவன் ஒருவனையும் கொல்பவனுகவும், கொல்லப்பட்டவனுகவும் நினைக்க மாட்டான் (ஒவ்வொரு செயலுக்கும் தைவம் முதலிய ஐந்து காரணமுண்டாதலின் தைவம் ஸ்வதந்திரமாய் ஜீவனை நியமிப்பதன் காரணத்தால் ஜீவன் தன்னை ஸ்வதந்திரனுய், கொல்பவனுகவும் கொல்லப்பட்டவனுகவும் எண்ணுவது தவறு என்னவுமாம். கண்ணனும் இதுபற்றியே மேலே, என்னுலே முன்னமேயே துர்யோதனுதியர் கொல்லப்பட்டு விட்டார்கள் என்று சொல்லுகிறுர் 1. சரீரம் 2. ஆத்மா, 3. புலன்கள் 4. அங்கோபாங்கவினைகள் 5. தைவம், என்று ஐந்து காரணங்கள். மத்வமதம்) அழுக்கு வஸ்திரத்தைக் கழட்டி

எறிந்துவிட்டு புதிய உடையைத் திருப்தியாயுடுப்பது போல் பழமையாய் கிழமான இச்சரீரத்தை விடுவதில் பீஷ்மாதியருக்குஸந்தோஷமே. போரில் சரீரத்தை விடுவதானது தற்கொலை செய்துகொள்வதுபோலல்லாமல், ஸ்வர்கானுபவத்திர்க்காக தேவசரீரம் பெறுவதாம், என்பது சாஸ்திரஸித்தாந்தம். ஆகஙீயுத்தஞ் செய்வது அவர்கட்கு உபகாரஞ் செய்ததாகும். பீஷ்மாதியருக்கு இப்பொழுதில்லா விடினும் வேறுசமயம் வேறுசரீரம் வந்தே தீரும்! தர்மயுத்தத்தில் தேஹத்தை விட்டவர் கட்கு நல்லசரீரத்தைக் கொடுப்பேன். இது பரமாத்மாவான என் ஆக்ஞை. நீ என் ஆக்ஞாரூபமான தர்மயுத்தஞ் செய்து அவர்கட்க்கு உபகாரஞ் செய்யாவிடில் நான் உனக்கு கெட்ட சரீரத்தையே கொடுப்பேன். உன் நன்மையை உத்தேசித்தே நான் இவ்வளவு தூரஞ் சொல்லுகிறேன். ஓ அர்ஜுனா. உன்பாணங்கள், கத்திகள், நெருப்பு, ஜலம், காற்று, இவைகளால் ஆத்மாவுக்கு அடியோ, தாஹமோ, சிதிலமாகப் போவதோ, உலருவதோ கிடையாது. இவ்வாறான நிலையான ஆத்மஞான முடையவனாய் வருந்தாமல் யுத்தஞ் செய். இதற்கு மாறாக சரீரமே ஆத்மா வெனும் வழியாய்ப் பார்த்தாலும் யுத்தமவசியஞ் செய்யவேண்டியதே யாகும். எப்படியென்றால்? அந்தந்த சரீரத்தோடு அந்தந்த ஆத்மா அழிந்துவிடு மாகையால் பாபமேது புண்ணியமேது. அவைகளையனுபவிக்க நரகம்போவதேது? ஸ்வர்கம் போவதேது? இவ்வுலகில் தடங்கலில்லாத சுகமனுபவிப்பதேஸ்வர்கபோகமென்றால், அதற்குத் தடங்கலான விரோதிகளையழிப்பது அவசியமே. ஆயினும் பீஷ்மாதியர் பெரியோர். அவர்களுக்கு ஹிம்ஸை யுண்டாகுமே என்று எண்ணாதே. ஒருவருக்கு ஹிம்ஸையில்லாமல் மற்றவருக்கு சுகமுண்டாவது

உலகில் மிக அரிது. சத்ருக்களைக் கொல்லாவிடில் பந்துக்களானதர்ம புத்திராதியரை ரக்ஷிக்காத குற்றததிற்குள்ளாவாய். தவிரவும் உண்டான சரீரத்திற்கு அழிவும் அழிந்த சரீரத்திற்குச் சாம்பல், மண்முதலியவேறொரு உற்பத்தியும் அவசியமுண்டு. ஆகையால் வருத்த மற்று பீஷ்மாதியரைக்கொன்று உலகில் கீர்த்தியுடன் சுகமனுபவி அழியும் பொருள் களெல்லாம் முதலிலும், முடிவிலும் தெரியாதவையாய் நடுவில் சிறிது காலம் தெரிவன வாயிருக்கும், ஆகவே இவ்விஷயத்தில் கொஞ்ச மேனும் வருநதக் காரணமிலலை

சரீரமே ஆத்மா வெனுந்துர் வாதத்தைக் கொண்டும் உன்னை யுத்தத்தில் ஊக்கும் நிமித்தம் சொன்னேனே தவிர இது உண்மை வாதமல்ல. ஆத்மா நித்தியமே தேஹமநித்தியமே. இவ்வுண்மை உலகததில சரீரத்துடன் ஓடியலைநது திரியும் மனிதர்களுக்கு ஸுலபமாகத் தெரியாது. புண்ணியவானான ஒருவனே இதையறிவான். அவனிலும் சிலரே மற்றவர் கட்கும் இதையுள்ளபடி உபதேசிக்கயோக்கியராகின்றனர். கேட்பவர்களிலும் ஆயிரத்திலோரிருவரே இதையறிந்து கொள்ளுகிறார்கள். இவ்விதஞானம் பெற்றவன் உலகில் ரொம்பதுர்லபனாகிறான். (ஜீவர்களுடைய அறிய முடியாத தான இந்த ஆசசரியத் தன்மை ஸர்வேசுவரனுக்கு அஸாதாரணம். அவனைப் போன்ற ஜீவனுக்கும் இது தகுநததேயாம் என்னவுமாம். மத்வமதம்.)

இவ்வாறு அருமையும் கஷ்டமுமான விஷயத்தை உனக்காக நான் கருணைகூர்ந்து இவ்வளவு விரிவுடன் தெளிவாகச் சொன்னேன். வருத்தத்தை விடு. தேவாதிகளை எதிரிகளாய்க் கொண்ட யுத்தமும் ஸ்வதர்மமாய் உனக்கு வருநதக் காரணமாகாதிருக்க இந்தயுத்தத்தில் வருத்தமேன? தைரியத்துடன் யுத்தஞ்செய்' என்று இவ்வளவாக ' ஆத்மா நித்தியம் தேஹம் அநித்யம், என்னும் விஷயத்தை ஸ்ரீகிருஷ்ணபகவான் உபதேசித்தான்.

## 3. ஸ்வதர்மம் செய்யவேண்டியது.
### (31 முதல் 37 சுலோகம்.)

இவ்விதமான உபதேசத்தால் அர்ஜுனனுக்கு பீஷ்மாதியரிடம் கருணை தகாதென்பதைத் தெளிவுபடுத்தி இனிமேல் அவனுக்கு துர்யோதனாதியரிடம் ஸ்நேஹமும், தர்மயுத்தத்தில் அதர்மபுத்தியாலுண்டான கலக்கமுங்கூடாதென்பதைத் தெளிவுபடுத்த 'ஸ்வதர்மம் அவசியஞ் செய்ய வேண்டியது' என்பதை உபதேசிக்கிறான். (ஓ அர்ஜுனா! பரமார்த்ததத்வஞானத்தைப் பற்றவும் யுத்தஞ் செய்ய வேண்டியதே முறை லௌகிகநியாயத்தைப் பற்றவும் அதுவே முறை, என்னவுமாம். சங்கரமதம்.)

வாராய் அர்ஜுனனே! நீ முன்பெல்லாம் நல்லவர்களிடம் பழகி நல்வினை செய்பவன்' என்று பெயர் வாங்கினையே, இப்பொழுதோ உனக்குத் தர்மமாயும், என் ஆராதன ரூபமாய் பரமதர்ம மாயும் இருக்கு மிப்போரை செய்ய மாட்டேன் என்கிறாயே, ஏனிந்த நடுக்கம்? இப்படியான யுத்தத்தைவிட நன்மை தரவல்லது க்ஷத்திரியனுக்குவேறென்ன விருக்கிறது. இதைக் காம்யகர்மமாய்ச் செய்து தேவர்கட்குந்திருப்தியுண்டாக்குகிறாயில்லை, எனக்கு ஆராதன ரூபமான நிஷ்காம்யகர்மமாய்ச் செய்து எனக்குந்திருப்தி யுண்டாக்க மாட்டேனென்கிறாய். இத்தால் நீயும் த்ருப்தியடையவழியில்லை. உன்மனதில் அழுக்கு படிந்திருப்பதால் நான் சொல்லுவது புரியவில்லை. மனதினழுக்கையலம்பவும் நிஷ்காம்யகர்மமே தண்ணீரெனசாஸ்திரஞ் சொல்லுகிறது. இந்த யுத்தமாகிறதிறவுகோலால் வீரஸ்வர்கவாயில் திறக்கப் பட்டிருக்கிறது. க்ஷத்திரிய

னொருவனுக்கு இவ்விதமான யுத்தம் மிகுதியான புண்ணிய பலமாயே வருவதாகும். யுத்தம் முதலிலேயே நேராவிடில் பாதகமில்லை. தெய்வாதீனமாய் யுத்தம் நேர்ந்து விட்ட பொழுது பீஷ்மாதியரான பெரியோரையஞ்சிப் பதாயினும் இப்போரை நிறுத்துவது தகாது. போர் புரியாவிடில் இவ்வுலகில் அபகீர்த்தியையும், மறுவுலகத்தில் நரகத்தையும் அடைய நேரிடும். ஓ குந்திபுத்திரனை அர்ஜுனனே! நீ போர் புரிவது பாபமென்கிறாய். நான்பாபமல்ல என்கிறேன். உன்னறிவு கலங்கியிருக்கிறது. கலக்கமடையாதே. நான் சொல்வதை நம்பு. போர் புரியாவிடில் உன்முன்னிலையிலும், மறைவிடத்திலும் உனக்கு இகழ்ச்சி ஏற்படும். 'கிருஷ்ணனின் மருமகன், பாண்டுபுத்திரன், தர்மபுத்திரனின் தம்பியாமர்ஜுனன் ஸவ்யசாசி' (அதாவது இருகையாலுமம் பெய்துபவன்) என்று பிரஸித்தி பெற்ற உனக்கு மரணத்திலும் இகழ்ச்சி பெரிதுங் கொடிதாகும். இப்பொழுது நீ ஸ்நேஹம் வைத்திடுந்தர் யோதனுதியர் உனக்கு எப்பொழுதும் சத்ருக்களே. 'அர்ஜுனன் நம்படைவலிமையைக் கண்டதும் பயந்து புறங்காட்டி ஓடி விட்டான்,' என்று அவர்கள் க்ரூரமான வார்த்தை சொல்வதைக் கேட்டு நீ தானுகவே உத்வேகத்துடன் போர்புரியப் போகிறாய்' ஆகவே யுத்தத்தில் செற்றால் ஸ்வர்கத்தையடைவாய். வெற்றி பெற்றால் இங்கு தடங்கலில்லாது ராஜ்ஜியசுகத்தை யனுபவிப்பாய்.

போர்புரியப்ரதிக்ஞை எடுத்துக் கொள். ஸ்வர்கலோகம் இவ்வுலகசுகமிவ்விரண்டும் என்சோகத்தியையாற்றாதென்றாயே; அவ்விதமில்லை. க்ஷத்திரிய தர்மமானயுத்தத்தை பலத்திலாசையில்லாது என்முகமலர்ச்சிக்காக எனதாக்

ஞாகைங்கரியரூபமாய்ச் செய்தால் உனக்கு இஹபரலோக சுகமுண்டாவது என்பொருப்பு. தேஹமுடிவில்மோக்ஷசுகமுண்டாவதுமென்பொருப்பு. ஆகவே எப்படிநோக்கிலும் 'ஸ்வதர்மஞ் செய்யவேண்டியதே' என்று இவ்வளவாக ஸ்ரீ கிருஷ்ணபகவான் உபதேசித்தான்.



## 4. அதுசெய்ய வேண்டிய முறை.
## (38 முதல் 58 சுலோகம்)

இவ்வுபதேசத்தால் அர்ஜுனனுக்கு மோக்ஷத்தில் சிறிது அபிலாஷையுண்டானதை யவன்முகபாவத்தாலறிந்து ஸ்ரீபகவான், முமுக்ஷுவானவன் (ஸ்வ) கர்மஞ் செய்ய வேண்டிய முறையை உபதேசிக்கிறான்.

ஓ அர்ஜுனா! செயல்புரியுங்காலத்தில் உண்டாகும் சுகதுக்கங்களை ஸமமாக பாவித்தும், செயல் புரியக்காரண மான தேஹத்தின் போஷனத்திற்கான ஜீவனோபாய வினை களில் லாப நஷ்டங்களை ஸமமாக எண்ணியும், உள்ளதைக் கொண்டு த்ருப்தியுடன் பிரதானபலன்களில் ஆசையில் லாது யாவனொருவன் தன்கர்மங்களைச் செய்கிறானோ, இந்தகர்மத்தால் அவனுடைய ஸம்ஸாரஹேதுவான பூர்வ புண்ணியபாபரூப வினைகள் அழிந்து விடுகின்றன. அவன் தேஹமுடிவில் மோக்ஷமடைகிறான். இவ்விதகர்ம யோகத்தில் நடைபெற வேண்டிய புத்தி யோகத்தை இப் பொழுது சொல்லுகிறேன். கவனமாகக்கேட்பாயாக. (வியவசாயியானவன் உழுவது முதல் அறுவடைவரை ஊக் கமாக வேலைசெய்யவேணடியிருப்பது போல், கர்மமானது பயன் பெறுமளவு ஊக்கமாகச் செய்யவேண்டியதாகிறது. ஞானமோ மனோபலத்திற்குத் தகுந்தபடி அப்யாஸஞ் செய் தால் போருமானதாயிருக்கிறது. ஆகவே கர்மயோகத்தில் அர்ஜுனனுக்குப் பிடித்தமில்லாதிப்பதைக்குறிப்பாலறிந்த பகவான் சொல்லுகிறான்.) ஓபார்த்தனே! கர்மம் போலன்று கர்மயோகம். நிவ்ருத்தி தர்மமெனும் கர்மயோகமானது சிறிதளவு செய்தாலும் பெரிதான ஸம்ஸார பயத்தைப்

போக்கடிக்கிறது. இதை ஆரம்பித்து நடுவில்விட நேரிடினும் பாபமில்லை. பாபமில்லாதபோது ப்ராயச்சித்தமும் தேவையில்லை. ப்ரவ்ருத்திகர்மமெனுங் கேவலகர்மஞ்செய்பவனே அவ்வப்பயனை யடைய வேண்டி ஸகலாங்க புஷ்டியுடன் சாஸ்திர விஹிதபிரகாரம் அவைகளைச் செய்யவேண்டும். செய்யாவிடில் பயனில்லை. பாபமுண்டு. கூலிவாங்கும் வேலைக்காரன் சரிவர வேலை செய்யாவிடில் தப்பு. பிரீதியுடன் இலவசமாக வேலை செய்பவன் எவ்வளவு செய்யினும் அவ்வளவிலேயே யஜமானனுக்குத்ருப்தியாம். இந்த உலக நீதி இவ்விஷயத்திலுமொக்கும். மேலும் சாஸ்த்திரங்களில் பிரவ்ருத்திகர்மங்கள் பலபல பயனுக்காக பலவாக விதிக்கப்பட்டிருக்கின்றன. அதனங்கங்களுக்கும் தனிப்பயனும் அதர்க்காக பல அங்கங்களும் சாஸ்த்ர விஹிதம். கேவலமன்னம் சாப்பிடுவதாலுண்டான த்ருப்தியைவிடவ்யஞ் ஜனங்களுடன் அன்னம் சாப்பிடுவதாலுண்டாகுந் த்ருப்தி மேலல்லவா? அதுபோல காம்யகர்மங்கள் நிரையபலத்துக்காக அதிகமாகச் செய்யத் தந்தன. ஆகையால் பிரவ்ருத்திகர்மமே பலவாய் கஷ்டசாத்தியமானது. நிவ்ருத்தி கர்மமோ மோக்ஷமெனு மொரே பலத்திர்க்காக ஸர்வேசுவரனொருவனுக்கே ஆராதன ரூபமாய் செய்யப்படுவதால் ஸுலபமும் உத்தமமுங்கூட. சில்லரை வியாபாரத்தைவிட மொத்த வியாபாரம் ஸுலபமானது போல் ஸர்வேசுவரனுக்கு நிவ்ருத்திகர்ம பலமான மோக்ஷந்தருவது ஸுலபம். வேதம், மீமாம்ஸை, முதலிய சாஸ்த்ரங்களை மாத்திரம் படித்து வேதாந்தவறிவு பெறாத காமிகள், பழமில்லாது பூமாத்திரம் பூத்து வெளியழகு படைத்த மரம்போன்று அங்கோபாங்கஸாமக்ரிகளுடன் வெளி

யழுகொன்றையுமேபெற்ற ப்ரவ்ருத்தி கர்மங்களையே செய்கின்றனர். அதுமட்டுமல்ல இதர்க்குமேலாக வேறொன்றுமில்லை என்றுமவர்கள் தீர்மானமாகச் சொல்லுகின்றனர். அத்தால் அவர்கள் பலபிறவிகளையும் அதில் பல கர்மங்களையும் அதன்பயன்களையும் பெறுகிறார்கள். இவர்களுக்கு நான் உபதேசித்த நிவ்ருத்தி கர்மத்தைப் பற்றிய நிச்சயமொருநாளுமுண்டாகாது.

இவ்விதம் காம்ய கர்மம் அஸாரம், அல்பஸாரமாகில் அதை வேதம்விதிப்பானேன்? என்று நினைக்காதே. ஸாத்விகர், ராஜஸர், தாமஸர், எனும் மூவித அதிகாரிகள் நிறைந்த இவ்வுலகில் எல்லாரும் படிப்படியாக தன்னிடமும், உபநிஷத்திடமும் ஊன்றுவதர்க்காக பரமதயையுடன் தாய்போன்று வேதமானது பலவான கர்மங்களையுமுபதேசித்திருக்கிறது. பாலில் கலந்த மருந்து இனிமையாயருந்தப்பட்டு ரோயாளியின் ரோயை நீக்கி ஆரோக்கியத்தைத் தருவதுபோல். வேதம் முழுவதிலும் ஸகலவித துன்பத்துக்கும் மருந்தாய் இன்பக்கேணியான பகவான் கலந்து அவ்வவ்வதிகாரிகளுக்குத் தெரிந்தும் தெரியாமலும் பலன் தருகிறான். பகவானே எல்லாம் வல்லவன். பொம்மை கோபுரத்தைத் தாங்குவதாக நினைப்பதுபோல் ஜீவன், தான் தன் குடும்பத்தை நடத்தி வருவதாக நினைக்கிறான். இது தவறான எண்ணம். ஓ அர்ஜுனா! இதை விட்டு பரமஸாத்விகனாய், சுகதுக்கங்களில் ஆழ்ந்துவிடாமல் தாம் அடையாததையடைவதும், அடைந்ததை விருத்திசெய்வதும், ஈசுவராதீனமென்று தேர்ந்து ஸ்வதர்மத்தை ஊக்கமாகச் செய்வாயாக. பெரிய நதியில் ஜலம் கரைபுரண்டு போனாலும் நாம் தாஹமடங்கும் மட்டுமேயல்லவா தண்ணீரெடுத்துக் குடிக்கிறோம். அதுபோலவே

சாஸ்த்ரக்கடலிலும் தமக்கு வேண்டியதே தம்மால் எடுத்துக்கொள்ளத் தகும். (பிரவ்ருத்திகர் பக்திர்க்கு அதன் அதன் பலத்தை மாத்திரம் தரயோக்கியதை யுண்டு. நிவ்ருத்தி கர்மமோ விரும்பினால் எல்லாவித பயனையுந் தரவல்லது. எல்லாவித காமங்களும் ஸர்வேசுவரவிஷயகாமத்தில் அடங்கினதாகவும், அதைப்பெற்றவனுக்கு மற்ற காமங்கள் தன்னிடையேயுண்டா மென்று சாஸ்த்ர ஸித்தாந்தம் என்னவுமாம் சங்கரமதம்-மத்வமதம்) இத்தால் அவசியஞ் செய்யவேண்டிய நித்யநை மித்திக கர்மங்களைப் போன்று காம்ய கர்மங்களையும் முடிந்த வளவு பலத்திலாசையில்லாது நீ ஊக்கமாய் செய்வாயாக.

இ நிலேயே உனக்கு ஸம்பந்தம்.(அதாவது அதிகாரம்) பலத்திலில்லை. ஜீவர்களுக்கு 'கர்மஞ் செய்பவனும், கர்மபலமனு பவிப்பவனும் தானே' எனும் அபிமான மானது ஸத்வரஜஸ் தமஸ்ஸென்னும் முக்குணவிசிஷ்டமான பூமி ஜலம் தீவாயு ஆகாயமெனும் பஞ்சபூதமயமான சரீர ஸம்பந்தத்தால் உண்டாகிறது. சரீரம், அதன்காரணமான (மூல) பிரக்ருதி, ஜீவன், இவை யெல்லாமும் பகவானுக் கடங்கியவை. ஆகவே கர்மஞ் செய்யும் பொழுது "தானும் தனது சரீரமும் பகவானுக்குச் சேஷமானது; தான் நித்தியன் சரீரமநித்யம்; அநித்யமான இதைக் கொண்டே கர்மங்களை அதன் முடிவான பலத்திலாசையில்லாமலும், நடுவில் வரும் பலன்களில் சமத்வபுத்தி பண்ணியும், தன்னுடைய இக்கர்மத்தால் ஈசுவரன் திருப்தியடையட்டு மெனும் புத்தியுமில்லாமலும், ஈசுவராராதன ரூபமான இவை நம் கடமை" என்றுந் தெளிந்து கர்மஞ் செய்யவேணும். இத்தால் மோக்ஷ முண்டாம் (மோக்ஷமாவது இவ்விதகர்மவிசேஷத்தால் திருவுள்ளமுகந்த பகவானின் அநுக்ரஹத்தால் பரம

ப்தஞ் சென்று நித்யஸூரிகளுடன் ஸ்ரீய: பதியான பகவானின் குணாநுபவகைங்கரியஞ் செய்வதாம். ராமாநுஜமதம்.) கேவலப்ரவ்ருத்தி கர்மமே ரொம்ப மட்டமானது. இதைய நுஷ்டிக்குமவர்கள், மிகவும் நம்மால் வருந்தத் தக்கவர்கள் ஏனெனில்? அவர்களுக்கு முடிவில்லாத புண்ணிய பாப பலமாய் வருவதானஸம்ஸார பந்தத்திலிருந்து எப்பொழுது விமோசனமுண்டாகுமோ? நம்மாலு மறியப் போகாது. புண்ணியபாப மற்றுஜன் மஜராமரண மற்றநித்யலோகமடைய விரும்புபவர்கள், கீழ் சொன்ன விதம் கர்மயோகஞ் செய்யும் பொழுது இந்த புத்தியோகத்தில் கவனமாய் இருக்கவேணும். இது அடிக்கடி நழுவி விடக் கூடியது. சரீர பிரயாஸை செய்து கர்மஞ் செய்வது ஸுலபம். மனதையடக்கி கர்மஞ் செய்வது கஷ்டம். ஆகையால் முதலில் மனது அழுக்கடைந்திருந்தும் பெரியோர்களையடி பணிந்து அவர்களின் சாஸ்த்ரோபதேசமூலமாக ஞானம் பெற்று, கீழ்ச் சொன்ன நிவ்ருத்தி கர்மஞ் செய்யவேணும். அப்பொழுதுபரமாத்மாவான நான் எனது கிருபாபிரவாஹத்தால் மனதின அழுக்கையலம்பி சுத்தமாக்கி இனிதாக அங்கிருக்கிறேன். மோஹம் விழுந்தடித் தோடிவிடும். பிறகு இத்தனை நாள் விடவேண்டியதில் தான் ஆசைவைத்ததையும், பெறவேண்டியதில் தான் வெறுத்ததையும் நினைத்து வருத்தம் தன்னிடையே வரும். (பரமார்த்ததத்வஞானத்தில் எல்லாமொன்றாகையால் வேதாதி சாஸ்த்திரங்களில் பலவாய் சொல்லப்பட்ட விஷயங்கள் கேவலம் வியவஹாரதசையிலென்று ஞானிக்கு அவையெல்லாம் நிஷ்பலம் என்று தோற்றும், என்னவுமாம். சங்கரமதம்.) (பகவானிடம் காமம்(அதாவது அளவு கடந்த அன்பு) பூண்டவனுக்கு மற்ற விஷய காமங்களும், அதற்கு

விரோத மில்லாமல் தன்னடையே பகவதனுபவோபகரண மாய் வருமென்னவுமாம். மத்வமதம்.) பிறகு ஸர்வக்ஞனை என்றால் கிருபையுடன் கடாக்ஷித்து உபதேசிக்கப்பட்ட இவ்விஷயத்தையறிந்து தைலதாரை(அதாவது எண்ணெயின் தாரை விடாமல விழுவது) போன்ற நிலையான ஆத்ம ஞானத்தின் அநுபவமேற்படும். இதைத் தொடர்ச்சியாக வநுபவித்து ஜீவன் தன் ஸ்வரூபபிரத்ய க்ஷத்தை யடைவான். இந்தஜீவாத்மபிரத்ய க்ஷத்தையே 'யோகம்' என்று சாஸ்த்ரஞ் சொல்லுகிறது. (நிலையான ஆத்மஞான முண்டானதும் சாஸ்த்ரவிஹிதமான பலவிசேஷகர்மங்களும், மனதை யலைவிக்காதபொழுது ஆத்ம பிரத்யக்ஷமுண்டாமென்னவுமாம். சங்கரமதம். (நிலையான ஆத்மஞானமுண்டாவதற்குமுன் விருத்தமானாலும் பிறகு இதுக்கனுகுணமாக சாஸ்த்ரவிஹிதகாமங்கள் விஷ்ணுலாபமாகிற ஒரேபயனுக்காக நிற்கின்றபொழுது ஆத்மபிரத்யக்ஷ முண்டாம் என்னவுமாம். மத்வமதம்.) அத்தால் தனக்கு ஸ்வாமியான பரமனிடம்பரபக்தியுண்டாகிவளர்ந்து மோக்ஷமடைவான். ஓ அர்ஜுனா! நீயும நான் உபதேசித்தவிதம் கர்மயோகஞ் செய்து ஆத்மஞானம் பெற்றுச்ரேயஸ்ஸையடையவேண்டும், என்று இவ்வளவாக, பகவான் முமுக்ஷுவானவன் (ஸ்வ) கர்மஞ் செய்யவேண்டிய முறையை உபதேசித்தான்.



## 5. நிலையான ஆத்மஞானத்தின் லக்ஷணமும், அதன் பேதமும்.

(54 முதல் 58 சுலோகம்)

இவ்விதமுபதேசிக்கக் கேட்ட அர்ஜுனன் ஆத்மாவலோகனத்திற்குக் காரணமான நிலையான ஆத்மஞானமென்பது யாது? அது மனதில் உண்டாவது எப்படி இவ்வித ஞானியின் வியாபாரம் (அதாவது நடத்தை) எவ்விதமானது இவைகளையுபதேசிக்கவேணு மென்று பிரார்த்திக்க, பகவான் ஞானியின் நான்கு பேதத்தையும், அவர்களின் வியாபார விசேஷத்தையும், நான்கு ஞானஸ்வரூபத்தையும் உபதேசிக்கிறான்.

1. எவனுடைய மனதானது, தன் ஆத்மாவைப் பற்றியே விருப்பமுடையதாய், எல்லாவித ஆசைகளையும் அனாதி காலவாஸனையுடனும் விட்டு தன் ஆத்மாவிடமே திருப்தியுடைய தாயிருக்கிறதோ, அவனே முதிர்ந்த ஞானி. இவனுக்கு உடனே ஆத்மாவலோகன முண்டாகிறது. இந்நிலைக்கு 'வசீகாரஸம் ஜ்ஞை=வைராக்கியம்' என்று பெயர்.

2. இதற்கொருபடி குறைந்ததாய் இந்நிலைக்குக் காரணமான நிலை 'ஏகேந்திரியஸம் ஜ்ஞை எனப்படும். சுகதுகாதிகளுக்குக் காரணமான பார்யை, புத்திரன் முதலானோரின் கூடுதலும், பிரிவும், உண்டாகப் போகிறது என்பதையறிந்தும், அதில் விருப்பமோ வெறுப்போ இல்லாது கோபமில்லாத மனதுடன் ஆத்மமனனஞ் செய்வது இந்நிலை. முதற்சொன்ன நிலைக்கேஸ்திதப்ரக்ஞதை என்று பெயர், இது அதற்கு காரணமாதலின் இதுவும் ஸ்திதப்ரக்ஞதையாம் (அதாவது நிலை நின்ற ஞானமாம்.)

3 இதில் சிறிது குறைந்தும் இதர்க்குக் காரணமான நிலை 'வ்யதிரேகஸம்ஞை' எனப்படுகிறது. பிரியமான வஸ்துவைப் பெற்று அத்தால் சுகமும், அதைப்பிரிந்துக் துக்கமும், அப்பிரிய வஸ்துவைச் சேர்ந்ததால் துக்கமும் அடையாமல் அவைகளில் பற்றுதலில்லாமல் அவைதானே வந்துபோகின்றன, என்றிருப்பது இந்நிலை. இதுவும் நிலை நின்ற ஞானமேயாகும்.

4 இதிலும் சிறிது குறைந்து இதர்க்குக் காரணமான நிலை 'யதமானஸம்ஞை' என்று பெயர் பெற்றது.

ஆமையானது தனக்குப் பயம்வந்தபொழுது எங்ஙனம் தன் உடலைச் சுருக்கிக்கொள்ளுகிறதோ அங்ஙனமே இந்த்ரியங்களாலுண்டாகு மனுபவம் எப்பொழுது பரமாத்மாவான என் விஷயானுபவத்தின் நின்றும் மாற்றியழிக்க ஆரம்பிக்கிறதோ, அப்பொழுது அந்தந்த விந்திரியங்களை அவ்வவ்விஷயங்களில் நின்றுமிழுத்து மனதிலடங்கச் செய்வது இந்நிலையாகும்.

இப்படியாக இந்திரியங்களை மனதிலடக்கி, மனதிலிருக்கும் ராகத்தையும் மாற்றி, ஆத்மாவையே மனனஞ் செய்வதால், அனாதிகால வாஸனையைத் திரும்பவும் வராதபடி மாற்றி, அவ்வித மனதால் தன் ஆத்மா வொருவனையே யறிவதுதான் ஸ்திதப்ராக்ஞதையாம் இத்தால் அந்தந்த காம்மிய வஸ்துக்களை காமத்துடன் பாராதிருப்பது, காமத்துடன் பார்த்தாலும் பற்றுதலில்லாதிருப்பது, சிறிது பற்றுதலுடன் அவைகளை யநுபவித்தாலும் அதிக ஆதரவு வைக்காதிருப்பது, தன்னடையே கிடைக்கு மவைகளில் அதிக் ஆசையிருந்தாலு மதை அடக்க ஆரம்பிப்பது, என்கிற நான்கு வியாபாரத்தையும் நாம் தெரிந்துகொள்ளு

கிறோம். இவ்விஷயத்தை நாம் ஒருலௌகிகத்ருஷ்டாந்தத்தை முன்னிட்டு நன்றாகவறிந்து கொள்ளலாம். அதாவது:- ஜீவன் ஒரு தலைவன். அவன்மனது அவனுடைய தலைவி. செவி, வாய், கண், மூக்கு உடலெனுமைம்புலனும் ஐந்து தோழிகள். அவர்கள் வெளிவிஷயங்களில் மேய்பவர்கள். ஜீவனெனும் தலைவன் மனதெனும் தன் தலைவியை துஷ்டைகளான இந்த்ரியங்களாகிற தோழிகளிடமிருந்து, தன் நற்குணங்களாகிற ஞானசக்த்யாதிகளை யனுபவிக்கச் செய்யும் வழியாகச் சிறுகச்சிறுகப்பிரிக்கவேணும். அப்பொழுது மனதெனும் தலைவிக்கு பாஹ்யாநுபவமெனும் பரபுருஷர்களிடம் என்னதானவர்கள் வலியவந்தாலும் சிறிதும் ருசி (அதாவது ஆசை) யுண்டாகாது. இவ்விதத் தலைவியிடம் தன்னை யுண்மையாகப் பார்த்தலாகிற புத்திரனைப் பெற்று, தலைவன் பரமாத்மாநுபவமாகிற அந்தமில்லாபேரின்ப மடைகிறான், என்பதாம். இவ்வளவாக நிலையான ஆத்மஞானத்தின் லக்ஷணம், அதன் பேதம், இவைகளை பகவான் உபதேசித்தான்.

---

## 6. இந்த்ரியங்களை யடக்கும் விதம்.

## (59 முதல் 68 சுலோகம்.)

இந்த்ரியங்களை அவ்வவ் விஷயங்களிலிருந்து அடக்குவது ஞான நிஷ்டைக்குக்காரணம். அத்தால் ஆத்ம பிரத்யக்ஷம் என்று கீழே சொல்லப்பட்டது. வாஸனையுடன் விஷயங்களை இந்த்ரியங்கள் விடுவது ஆத்ம பிரத்யக்ஷமுண்டானலேயே சாத்தியமாகும். ஆகவே ஒன்றுக்கொன்று காரணமாய் அண்டியிருக்குமது ஸித்திப்பது எப்படி என்கிற ஐய்யத்தைத் தீர்க்க பகவான் இந்த்திரியங்களை யடக்கும் விதத்தை உபதேசிக்கிறான்.

ஓ குந்தீ புத்திரனை பார்த்தனே! இந்த்ரிய ஜயத்தாலே ஆத்மாவலோகனம், ஆத்மாவ லோகனத்தாலே இந்த்ரிய ஜயம் என்பதனுல் இதில் சந்தேஹங் கொண்டு பயப்படவேண்டியதில்லை. முதலில் அசுத்தமான மனம், புலன், உடல், இவைகளுடனேயே விஷய சுகங்களைச் சிறுகச் சிறுக அடக்கவாரம்பித்து, பரமாத்மாவான என்னிடமே மனது பற்றுதலடையும்படி முயற்ச்சி செய்ய வேணும். என் கிருபையால் மனந் தெளிந்து புலன்கள் அதர்க்கடங்க ஆரம்பிக்கும். இன்னமும், அளவுபட ஆஹாரமும் தூக்கமும் ஆகிற உபகரணங்களுடன் ஏகாந்த விடத்தில் சமமான ஆஸனத்திருந்து பரமாத்மாவான என்னை ஊக்கமாகத் தியானம் செய்வது நன்மையையே தரும். என்னை மறந்து என்னதான் சிரமப்பட்டு புலன்களை யடக்க முயற்சித்தாலும் அவை யடங்காது. மனதில் விஷயத் தியானம் உண்டாகவே கூடும். அத்தால் முதலில் அவைகளில் லேசான

பற்றுதலும், பிறகு அவைகளில் அதிக ஆசையும், அவை கிடைக்கப்பெறுவிடில் காரணமின்றியே எதிரில் தோன்றும் எல்லோரிடமும் வெறுப்பும் கோபமும், அத்தால் 'இன்னது செய்கிறோம்' என்று தோற்றுதபடி தவறு செய்வதும், அத்தால்தான் ஆரம்பித்த வினையில் மறதியும், கொஞ்ச நஞ்சமுண்டான ஆத்ம விஷயபுத்தி நாசமும், உண்டாகி ஸம்ஸாரஸாகரத்திலேயே முழுகிவிட நேரிடும். ஆகையால் முமுக்ஷுவுக்கு விஷயத்தியானம் கூடவே கூடாது. எப்பொழுதும் பகவத்தியானமே வேண்டும். முன்னேற விரும்புமவன் இதை ஒருநாள் ஒருதரமாவது நினைக்கவேண்டும்.

விஷய போகத்திற்க்காக பகவான் கொடுத்திருக்கும் இந்த்ரியங்களைக் கொஞ்சம் திருப்திப் படுத்திவிட்டு பிறகு வைராக்கியம் பெறலாமே, என்று நினைக்காதே. அவ்விஷய சுகங்களை நன்றாக வனுபவிப்பதும், அவைத்யாஜ்யமென்பதை நிரூபிக்க விரிவாக அவைகளைப் பேசுவதும், ஆசையைவளரவே செய்யும், விரக்தியுண்டாகாது. கோமணத்தைக் காப்பாற்ற பெரிய ஸம்ஸாரத்தை வளர்த்த ஸன்னியாசி கதையாய் விடும். பகவத்தியானமில்லாத மனதை ஆசைபடக்கி யாளும். ஆசைவயப்பட்டவன் என்றென்றும் உலகுக்கு அடிமைப் பட்டவனே. ஆகவே அவனுக்கு சாந்தி ஏற்பட வழியில்லை. ஸ்வதந்திர புருஷனே சாந்தி சுகமனுபவிக்கவுரியனுகிறுன். எதிராக வீசும் காற்றுனது கப்பலை யலைத்து முழுக்கிவிடுவது போல் ஆசை மனதைக் கவிழ்த்துவிடும். எந்தந்த கோணத்திலிருந்து விஷயங்களைப் பார்த்தாலும் எவனுக்கு மனது விகார
அவனுக்கு அடுத்த நிமிடமே தெளிவான ஸ்வாத்ம பிரத்யக்ஷமுண்டாம். விகாரமடையாத மனதைப் பெற்றிருக்

குந் தன்மையும் ஸ்வாத்ம பிரத்யக்ஷ நிலையின் ஒரு பிரிவு, என்னவுந் தரும் ஓ அர்ஜுனா! நான் சொல்லுவது எவ்வளவு கசப்பாயிருந்தாலும் முடிவில் இனிமையையுடையது நீ இதைச் செய்தே தீரவேணும். இதற்கு வேண்டிய வலிமையுன்னிடமிருக்கிறது. அதை நீ சரியாய் உபயோகித்துக்கொள். நேர்மையான லக்ஷ்க்ஷியத்தை தவறு நிறைந்த குறுகிய வழியால் சீக்கிரமாக அடைய முயற்சிப்பதைவிட சுத்தமான நேர்வழி சென்று சிறிது தாமதத்துடனுவது ஸந்தேஹமற லக்ஷ்க்ஷியத்தை யடைய முயற்ச்சிப்பதே யழகாம். இவ்வளவாக பகவான் இந்த்ரியங்களை யடக்கும் விதத்தை யுபதேசித்தான்.



## 7. முடிவான ஆத்மஞானத்தின் லக்ஷணம்.

## (69—70 சுலோகம்)

இதைக்கேட்டவர்ஜுனன் சிரம ஸாத்தியமான ஆத்மாவலோகனத்திலாசையுண்டாகி அதன் ஸ்வரூபத்தை யறிய விரும்புகிறான், என்பதைக் குறிப்பாலறிந்து பகவான் ஆத்மாவலோகனமாகிற முடிவான ஆத்மஞானத்தின் லக்ஷணத்தை யுபதேசிக்கிறான்.

உலகில் யாதொரு ஜீவர்கள் ஆத்ம விஷயத்தில் அறிவில்லாதவர்களாய் தூங்குகின்றனரோ, அதில் ஞானியானவன் விழித்திருப்பன். சப்தாதிவிஷயங்களில் விழித்துக் கொண்டு ஊக்கமாயிருக்க ஜீவர்கள், ஞானியானவன் அவ்விதபோக போக்கியங்களில் தூங்குவான். அதாவது ஞானிக்கு இப்போகங்கள் ஒரு பொருளாய் தோற்றாது, என்று பொருள். பெரிய கடலுக்கு நதி ஜலம் விழுவதால் ஒரு ஏற்றமோ, விழாததால் ஒரு தாழ்வோ இல்லாதாப் போல் ஸ்வாத்ம வெளிச் சிறப்புபெற்ற ஞானிக்கு மற்ற காமங்களின் கூடுதலாலோ, நழுவதலாலோ, ஒரு ஏற்றத் தாழ்வு மில்லை. ஆத்மஞானம் பெற்றவனே சாந்தியடைவான் மற்ற காமங்களை விரும்புமவன் ஒவ்வொரு காமம் போக மற்றொரு காமங்களை விரும்பி சாந்தியிராமல் ஓயாமல் [illegible] நான் இவ்வளவாக உபதேசித்தபடி 'ஆத்மாநித்தியன்' தேஹமநித்தியம், கர்மங்கள் பலத்திலாசையில்லாது செய்ய வேண்டியனவே, என்று நிச்சயித்து மனதை என்னிடஞ் செலுத்தி ஆரம்பிக்கப் பட்டபோரை செவ்வனே செய்து முடிப்பாயாக. நடுவே பலபயன்களும் முடிவான மோக்ஷபல

னும் என்னருளால் தானுகவே உனக்கு வரும் ஸந்தேஹம் வேண்டாம், என்று பகவான் உபதேசித்தான்.

(முற்றுமுணர்ந்த ஞானியர்க்கே உண்மையான ஸ்வாதமாநந்தத்தால் வெளியுலகின் பலவானகர்மங்கள் செய்ய வேண்டியிரா. அவ்வித ஞானம்பெற முயற்சி செய்யுமவர்கட்கு நிஷ்காம்யகர்மஞ் செய்யவேண்டியதே முறை ஓ அர்ஜுனு! நீயும் முயற்சி செய்யுமவர்களின் அளவிலே யேயுள்ளவனுகையால் உனக்கு செயல் புரிகையே முறை, என்று உபதேசித்தான், என்னவுமாம் சங்கரமதம்.)



## 8. அதிகாரி பேதம்.

### (71—72 சுலோகம்)

ஓ பார்த்தனே ! இவ்வளவாக நான் உபதேசித்த விஷயங்களில் சிறுவயது முதலே விருப்பமுள்ளவனுய், பெரியோர்களே யடிபணிந்து பழகி ஞானம் பெற்று முயர்ச்சி செய்பவன், கிழவயதில் தேஹ முடிவுசமயத்திலும் இவ்வித ஞானத்துடனேயே தெளிவடைந்து நற்கதி பெறுவான். முதலில் சிறிது காலம் காம்மிய விஷயங்களை விரும்பியனுப விப்பவனும், புண்ணிய விசேஷத்தால் நல்லவர்களுடன் பழக ஆரம்பித்து அதடி யாகத்தன் வயது முதிர்ந்தஸமயத்திலும் கர்மயோகத்தால் முக்தி பெற முயற்ச்சிப்பவனும் சித்தி பெற்றே தீருவான். ஆகவே காமிக்கு விமோசன மேயில்லே, என்பதில்லே. இதுவே நிவ்ருத்தி கர்மத்தின் மஹிமை (தான், எண்ணும் விதமே பலனுகையால், சரீரமுடிவில் எவ்வித எண்ணமோ அவ்விதமே பயனுமாகையால் மரணஸமயத்திலும் இவ்வெண்ணத்தையே வளர்த்து சித்தி பெறவேணும். கபவாத பித்தாதிகளால் மொத்துண்டு துக்கிக்கு மளவில் இவ்வெண்ண முண்டாவது ஸர்வேசுவரானுக்ரஹத்தால். அல்லது இவர்கள் முன்பு இதை நினைத்ததை ஸர்வேசுவரன் அப்பொழுது தானே நினைத்து சித்தி பெறச் செய்கிருன்' என்னவுமாம். மத்வ மதம்.) இத்தால் முதலிலிருந்தேவிரக்தியுடையவன் ஒருவன், என்றும் சிறிதுவயது முதிர்ந்த பொழுது விரக்தி பெற்றவன் மற்றொருவன், என்றும் இரண்டு வித அதிகாரியை பகவான் உபதேசித்தான்.

இந்த கீதையின் இரண்டாவது அத்தியாயத்தால் கீதா சாஸ்த்ரமுழுமைக்கும் விஷயமான பகவானின் ஆராதன

ரூபமான கர்மயோகத்தால் ஸ்வாத்மப்ரத்யக்ஷம் பெறுவதே உலகில் மனிதர்கள் உஜ்ஜீவிக்கவழி. இத்தால் பரமனிடம் பக்தி, அதுமுதிர்ந்து ஒருக்ஷணமும் பகவானைப் பிரிந்திருக்க முடியாத நிலை இவ்வித நிலையுடைய பாகவதோத்தமர்களுடன் பரஸ்பரம் கூடிக்குழாமாகபகவத்குணத்தைப்பேசியுங்கேட்டும் எழுதியும் அநுபவித்து பகவானுக்கு கூடியாடிவிழாச் செய்து பொழுது போக்குதல், இவ்விதமான பொழுது போக்குடன் இவ்வுலகில் இருக்கும் நாள் இனிதாகக் கழித்து முடிவில் அந்தமில் பேரின் பமடைவது மனிதர்களின் பிறப்புரிமை என்று நாம் தெரிந்து கொள்ளுகிறோம். வாழ்க உலகம்.

**கீதை 2-வது அத்தியாயம் தமிழ் வசனம் முற்றுப் பெற்றது.**

# முடிவுரை.

எனதன்பார்ந்த உலகஸஹோதர சகோதரிகளே! இப்பொழுது நான் கீதை 2வது அத்தியாயம் தமிழ் வசன மெனும் இச்சிறு நூலை எழுதி உங்கள் கவனத்துக்குக் கொண்டு வந்திருக்கிறேன். இப்போதய உலகம் கீதையுல கம். கீதையின் அடிப்படைக் கொள்கையையே ஜனங்கள் அங்கீகரிக்க ஆரம்பித்திருக்கிறார்கள். நாம் இவ்வளவு விரைவாக ஸ்வதந்திரம் பெற்றும் இந்தியக்குடி யாசுமக்களாய் மகிழ்ச்சியுடன் நிமிர்ந்து நிற்பதும் காங்கிரஸ்மகா சபையின் அரியசேவை யினாலேயே. அதற்கு இவ்வளவுவலிமையை உண்டாக்கினவர் மகாத்மா வெனும் காந்தியேயாவார். அவர் அந்தசபைக்கு உள்ளிருந்தும் வெளியிருந்தும் உல கிர்க்கு அரியசேவை செய்திருக்கிறார். தன்னையும், தனது கடமையையும் உள்ளபடி யறிந்து செயல் புரிய, மனிதனுக்கு முதன் முதல் அவசியமாக வேண்டிய குணங்கள் அஹிம் ஸையும், ஸத்தியமு மேயாம். இதையே கீதை 16வது அத் தியாயம் 2வது சுலோகத்தில் பகவான் சொல்லியிருக்கிறான். மனிதன் இதடியாகவே அமரவாழ்வு பெறுகிறான். காந்திய வர்கள் இதையே தனது லக்ஷ்க்ஷியமாகக் கொண்டு மரணம் வரை செயல் புரிந்தார். ஆகவே அவர் எப்பொழுதும் வெற் றிமகிழ்ச்சியுடனேயே சிறிதுந் தளராமல் வாழ்ந்து வந்தார். என்னே இந்த கீதையின் மஹிமை? எக் காலத்திலும் எவ்வி தலக்ஷ்யங் கொண்டவராயினும், தனது லக்ஷ்யத்துக்கு கீதை யையே மேற்கோளாக எடுத்தாளும் படிவளைந்து கொடுக்குந் தன்மை இந்த கீதைக்கே வுரித்தாகும். உலகுள்ள வளவும் கீதையின் தத்வமே ஜீவனுள்ள தாய் மிளிரும். ஐய்யமில்லை.

அஹிம்ஸை, ஸத்திய மெனும் நற்குணப்பண்புடைய ஒரு வன், முற்றுந் துறந்து ஞானியாய் தான் ஒருவனுயே வளரு வதைவிட, உலகுடன் நன்முகக் கலந்துபழகி, நல்வினைகளைச் செய்தும், செய்வித்தும், உலகைத்தன் வழிசெலுத்துவனே, பகவானுக்கு பிரியனுன ஞானியாம். இவன் உலகை ஸம மாக பாவிக்கக் கடவன். இவ்விஷயம் கீதை 6வது அத்தி யாயம் 29 சுலோகம் முதல் 35 வரை உபதேசிக்கப் பட்டி ருக்கிறது. இந்த சாம்மியயோகத்தையே நம்மரும் பெருந் தலைவர் மஹாத்மா காந்தியவர்கள் கடைப் பிடித்தார்கள், என்பது திண்ணம். ஸாம்யயோகமாவது, 1 உலகில் சகல மனிதனும் அரோகதிட காத்திரத்துடன் சுற்றத்துடன் இனிதிருக்க விரும்புகிறுன். இதில், தம்மைப்போலவே பிற ரும் 2 எல்லார் மனதிலும் ஈசனிருந்து அவரவர்களை யியக்கு கிறுன். ஆகவே நமது கொள்கையும் நடைமுறையும், எவ் வளவு மகிமைவாய்ந்ததோ அப்படியே தான் பிறருடைய கொள்கையும், நடைமுறையும். நமது லக்ஷ்க்ஷியம் எவ் வளவுதான் உண்மையாயிருந்தாலும், அதைப் பிறரிடம் பலாத்காரமெனுங் குறுக்கு வழியில் திணிப்பது கூடாது. நேர்வழியான பிரசார மூலமாயே பிறரைத்தன் வழிப்படுத்த வேணும். 3 இப்படி தன்னிலையையும், தன்னையாளும் பர மனின் நிலையையும் பார்த்து உலக முழுவதையும் ஏகரூப மாய் பார்ப்பவன் சிறிது லௌகிகவியாபாரத்தின் வயப் பட்டு தவறு செய்ய நேர்ந் தாலும், அவன் இந்த ஸாம்ய யோக மகிமையால் தோஷ மற்றவனே யாகிறுன். இதுவே காந்திதத்வத்தின் ஆணிவேர். கலியுகத்தில் உடல்வலி மனவலி முதலியதைச் சிறதளவு பெற்று காமாதி வயப்பட்ட நமக்கு இந்த யோகத்தைத் தவிர வேறு பிழைக்கவழியில்லை 4 இவன் தனக்குண்

டாகும் சுகத்தையும் பிறரது போன்றும், பிறருக்குண்டாகும் துக்கத்தை தன்னது போன்றும் பாவிக்க வேண்டியவன். இந்நிலை நற்குண ஸம்பந்நனுக்குத்தன்னிடையேவந்து தீரும் இவ்விஷயத்தைத் தினமும் எழுந்திருக்கும் பொழுதும் படுக்கும்பொழுதும் ஒருதடவையாவது நினைக்கவேண்டியது. ஏனெனில்? மனது சஞ்சலமாகையால் அதையடக்க இதுவே உபாயம். வைராக்யமும் சிறிதளவு வேணும். இவ்வித மகிமை வாய்ந்த கீதையின் மற்ற விஷயங்களை இன்னமும் சிறிது அதிகமாக வறியவிரும்புமவர்கள் நான் எழுதியிருக்கும் "கீதாசுலோகஸங்க்ரஹம்" (தமிழ் வசனத்துடன்) என்னும் புத்தகத்தைப் பார்க்கவும். 'ஆளவந்தார்' எனும் ஸ்ரீவைஷ்ணவ பரமாசாரியரின் 'கீதார்த்த ஸங்க்ரஹ மெனும்' நூலின் 32 சுலோக விவரணமாக 320 சுலோகங்கள் கீதையிலிருந்து பொருக்கப்பட்டது இந்நூல். நடுவில் சுலோகங்கள் விட்டதாய் தோற்றுது தொடர்ச்சியாய் காணப்படுகிது. இந்நூலும் மற்றும் பல நூலும் அடியேன் மூலமாய் உலகெங்கும் பரவி பிரசாரமாக வேண்டி எல்லாம் வல்ல இறைவனையும், உலக மஹாஜனங்களையும், அடிதொழுது வேண்டி நிற்கிறேன்.

இப்படிக்கு

26-1-1950 ஸ்ரீவைஷ்ணவ தாஸன்

மதராஸ் 1. P. B. K. ஸ்ரீநிவாஸாசாரியன்

திருநாங்கூர் பிரதிவாதிபயங்கரம் ஸ்ரீவைகுந்த விண்ணகரம் திருமாளிகை 16 வது ஸ்ரீ. உ. வே. வித்வான் ஸ்ரீ. கிருஷ்ணமாசாரியார் ஸ்வாமி குமாரர் (நியாய, வியாகரண சிரோமணி) P. B. K. ஸ்ரீநிவாஸாசாரியார் எழுதிய நூல்களின் விவரம்.

1. மும்மதத் தேனடை 0-4-0

2. கீதை 2-வது அத்தியாயம் தமிழ்வசனம் 0-6-0

அச்சில் வெளிவருபவை—

3. கீதாசுலோக ஸங்க்ரஹம் (தமிழ்வசனம்) 320 சுலோகம்.

4. கீதையின் செம்மைப்பொருள் விளக்கம்.

5, சீர்காழி தாடாளப் பெருமாள் திருப்பதி கவிரிவுரை.

6. திருநாங்கூர் 11 திவ்வியதேச ஸ்தலபுராணம். (சுருக்கஉரை)

7. கமலாஸ்துதி ஸ்ரீகோபாலவிம்சதி மொழிப்புரை.

8. ஸ்ரீமத் பாகவதம் தசமஸ்கந்தம் ஸ்ரீ கிருஷ்ணவதார கட்டம் பதவுரை)

9. ஸ்ரீஸர்வார்த்தஸாதனீ ஸபாமாதாந்த உபந்நியாஸ மலர்.

ஸம்ஸ்கிருத பாஷையில்.

10. மீமாம்ஸாதிகாணார்த்த ஸங்க்ரஹம் ஸ்லோகமும் சுருக்கவுரையும்.

11. மீமாம்ஸாப்ரவேசினீ

12. நியாய ஸித்தாந்த முக்தாவலீ பிரச்னோத்தரமாலா மற்றும் பல.

மும்மதத் தேனடை (1 த்வைதம். 2 அத்வைதம். 3. விசிஷ்டாத்வைதம் இம்மதங்களை சுருக்கமாகவும் தெளிவாகவும் காட்டுகிறது. இரண்டு வருஷகாலம் ஸ்ரீமான். M. தேவராஜலு நாயுடு அவர்களின் வீட்டில் இந்நூலாசிரியரால் நடத்தப்பட்ட ஸ்ரீபகவத்கீதை காலக்ஷேபமடியாக இந்நூல் தோன்றிற்று. மயிலை ஸம்ஸ்கிருத கலாசாலை அத்வைத வேதாந்த பண்டிதர். பிரம்மஸ்ரீ போலகம். ஸ்ரீராமா சாஸ்திரிகள், திருவல்லிக்கேணியில் த்வைத வேதாந்த வித்வான், ஸ்ரீ கௌ யதுநாதாசாரியார், ஸ்ரீமதுபயவேதாந்த வித்வான் காரப்பங்காடு வெங்கடாசாரியார் ஸ்வாமி இவர்களின் மதிப்புரையுடன் கூடியது.) சென்னை தினசரிப் பத்திரிகைகளான ஹிந்து, பாரததேவி, சுதேசமித்திரன் இவைகளிலும் நல்ல மதிப்புரை எழுதப்பட்டிருக்கிறது.

கிடைக்குமிடம். P. B. K ஸ்ரீநிவாஸாசாரியார்

51. நாராயணமுதலித் தெரு, G. T. மதராஸ்

---

Printed at The New Era Printers Madras-1.